உ



ஸ்ரீபாரதீ தீர்த்தவித்தியாரண்ய
சுவாமிகளவர்கள் அருளிச்செய்த
# ஸ்ரீபஞ்சதசப்பிரகரணம் மூலம்.

இதில்
முன்பத்துப்பிரகரணம்,
ஸ்ரீகோவிலூர் துறவாண்டவரென்னும்
ஸ்ரீ அருணசல ஞானதேசிகரின்
பாதசேகரரான,
ஸ்ரீநித்யானந்த சுவாமிகளாலும்,
பின்னைந்து பிரகரணம்,
திருக்களராண்டவரென்னும்
ஸ்ரீ வீரசேகரஞான தேசிகரின்
பாதசேகரரான
ஸ்ரீசுப்பைய சுவாமிகளாலும்,
மொழிபெயர்க்கப்பட்டு,
ஷ வீரசேகர ஞான தேசிகரின்
பாதசேகரரான
கோவிலூர் - காசிகானந்த சுவாமிகளால்
பதிப்பிக்கப்பட்டது.

---

விலை அணா 10.



சச்சிதானந்த அச்சியந்திரசாலை,
கோமளேசுவரன்பேட்டை,
சென்னை.



1913.



# பாயிரம்.



அனகநிர வயவபர வமலவுணர் வுறவே,
யுணவரிய பகுதியதி னுருமுழுது மறவே,
மனநிறைய வமுதசுக மகிழ்வுதரு மொளி
சேர், கனகசபை நடனமிடு கடவுளடி பணி 1
வாம்.

தேசமர் கழனிநற் றெய்வ மாநகர்
வாசநன் னேசன்சின் மயன்வெம் வன்பவ
மோசக னெனப்பகர் முத்தி ராமலிங்
கேசனை யிருதயத் திருத்தி யேத்துவாம். 2

மாசிலா மணிசிவ மாயை தீரவி
ஞசிமா சுகனரு ளுச லேசனுங்
காசினி யுயவரு கருணை யங்கடற்
றேசிகேந் திரன்சரண் சிந்தை செய்குவாம்.

தூண்டருஞ் சுடரே யாருஞ் சுகமுற
மன்னிமன் றுற்றுத், தாண்டவம் புரிந்தெம்;
போல்வார் தளர்வற மேனி சாத்தி, யீண்ட
ணைந் தெனையு மாட்கொண் டெனதகங்
கோயில் கொண்ட, வாண்டவ னென்று 4
மன்னி யருளின னிதனை யம்மா.

விசேடக் குறிப்பு.



இரண்டாவது விவேகத்தில் 5 - வது 6 - வது செய்யுட்கள் ஒரு பொருளன; ஒன்ருகவைத் தெண்ணிக் கொள்க.

பிப்பிலாத என்பதைப் பிப்பலாத என்று படிக்க வேண்டும்.







ஓம் தத்ஸத்

பரப்பிரஹ்மணே நமஃ

# ஸ்ரீ பஞ்சதசி.

## மூலம்.

முதலாவது

## தத்துவ விவேகம்.

திருவளர் சங்கரா நந்த தேசிகன்
பெருகுமா மோகமாம் பெருங்க ராத்திரினைப்
பருகியின் பருளலே பரம வேலையா
மருமலி பாததா மரைவ ணங்குவாம். 1

அப்புதத் துவந்துவ வஞ்செந் தாமரை
யொப்புறு சேவையா லொளிரு நெஞ்சினர்க்
கிப்புவி தனிலுணர் வெளிது நித்திட
மெய்ப்புறு தத்துவ விவேகஞ் சாற்றுகேம்.

ஒலியொடு ருதியா மோதும் வேத்திய
மலிதரு நனவிடை வடிவின் வேறதா
நலிவுசெய் யவற்றின்வே றுகு ஞானந்தான்
பொலிதலி னேகமாய் வேறு பூணுமோ. 3

இன்னதாங் கனவினு மீண்டு வேத்திய
மன்னுரு நனவிடை மன்னி நின்றிடு
மன்னதாற் பேதமா மவற்றின் வேதனம்
பின்னமன் றேகமாய்ப் பிறங்கும் பெற்றி
யால். 4

துயின்றெழுந் தோனுக்குச் சுழுத்தி காலயி
வியைந்திடுந் தமவறி வெண்ணமா மதூஉம்
பயன்றரு மனுபவம் பற்றி வந்ததா
லயர்தரு தமமப்போ தறியப் பட்டதே. 5

அறிவது விடயத்தி னயல்மற் றன்று
காண், பிறவறி வினிற்கணுப் பிறங்கும் போ
தம்போன் முறையிதி னறிவுமுப் புரத்து
மேகமிந், நெறிபிற மூதயற் றினத்து நிற்கு
மால். 6

பேதமாய்ச் சென்றதும் பின்னர்ச் சார்வதா
மாதமாண் டுகமொடு மருவு கற்பத்துஞ்



சாதலும் பிறத்தலுந் தணந்த ஞானமொன்
றுதலி னித்தொய மாகுஞ் சோதியே. 7

ஓதுமான் மாவிதா முவப்பி னுக்கிட
மாதலாற் பரசுக மான்ம வத்துவிற் [மென்
சாதலோய்ந் திடநிதந் தரித்தல் வேண்டு
றேதமாய்ந் திடுமுவப் பிலங்கு கின்றதால்.

நேயந் தற்பொருட் டயனோர்வ தாமல
வேயதான் மாவிடை யிதர வேதுவோ
வாயதா லதுபர மாகு மாகையாற்
றூயவான் மாப்பர சுக சொரூபனே. 9

இவ்வகை மெய்யறி வெழிலின் பாமுயி
ரெவ்வமி லுத்தியா லிலகு தற்பரம்
அவ்வகை யவ்விரு வோர்க்கு மைக்கிய
மெய்வகை மறைமுடி விளம்பு கின்றதே.

விளங்குறு தெனிலிலை மிகுதி நேயமும்
விளங்குறு மெனிலிலை விடய வேட்கையும்
விளங்கினு மாதலான் விளங்கு றுததாம்
விளங்குமான் மாப்பர மேனி யின்பமே. 11

ஓதுவோர் குழுவிடை யுற்று நின்றிடுங்
காதல ஞேதுறு கவின்கொ ளோசைபோன்

மேதக விளங்கினும் விளங்கு ருதிதற்
சோதியின் றடையினுற் சொல்லி லாகுமால்.

இருப்பது விளங்குவ தென்னற் பால தாம், பொருட்கணத் தகைமையைப் போக்கி மற்றதன், விருத்தமா யிருப்பதில் விளங்கு ருதெனத், தருக்குறச் சனிப்பது தடைய தென்பரால். 13

காதல ஞெதொலி காதுட் கோடலி
னேததற் கனேகரோ டியைவுற் ஞேதுத
லோதுமிங் கதிமயக் குகித்தற் கேதுவா
மாதியி லவித்தையே யாகு மென்பவே. 14

பிரமசிற் சுகரிழற் பெற்று முக்குண
வுருவமாம் பகுதிய துற்ற சத்துவ
நிருமல மலினத்தி னேரு மாயையு
மருவவித் தையுமென வகையி ரண்டரோ.

மாயைவிம் பித்தவன் வயஞ்செய் தேயதை
யேயமூற் றறிவனு மீசன் ருனுமாந்
தேயவித் தையின்வயன் சீவன் மற்றதற்
காயவேற் றுமையினு லனேக னுதமே. 16



ஆமதி காரண வாக்கை மானிதா
னேமநற் பிராஞனு மிவர்கட் கீசனுற்
ருமதப் பகுதியிற் சாரப் போகம்விண்
போமருத் தனலறல் பூமி வந்தவே. 17

அவைகளின் சத்துவத் தைந்து கூற்றினுற்
செவிதுவக் கக்கியுஞ் சிருவை மூக்கெனு
மிவைமுறை யைந்துஞா னேந்தி யங்களாங்
கவினவை யனைத்தினுட் கரணம் வந்ததே.

விருத்திபே தத்திரு விதம தாமன
முருச்சமு சயமதி யுருவ நிச்சய
மரத்தமா மிரசதத் தைந்து கூற்றினுற்
பாரித்தவாய் கைபதம் பாயு குய்யமாம். 19

சோனவவை யனைத்தினுற் றுவள் பிராணனும், பினமுறு விருத்தியாற் பிறழ் பிராணனு, மனகவ பானனு மவிர்ச மானனும், வினைசெயு தானனும் வியானன் ருனுமாம். 20

புத்திகன் மேந்தியம் புகல்பி ராணனைந்
தத்தொடு மனமதி யாக்கை சூக்குமஞ்

சொத்திடு மிலிங்கமிச் சூக்க மானத்தா
லுத்தமப் பிராஞ்ஞனெண் டொளிருந் தைச 21
தன்.

இரணிய கருப்பனு மீசன் மற்றிவன்,
வரைவறு சமட்டியா மன்னுயிர் யாவையு,
மொருமையாத் தானென வுணர்த லின்
மையால், விரிவுறு சீவர்கள் வியட்டி யென் 22
பவே.

நுகர்வ மாலய நுகர்வுந் தோற்றிடப்,
பகவன்விண் முதற்பஞ்சீ கரணம் பண்ணி
னுன், வகிர்ந்திரண் டொன்றுநால் வகைசெ
ய் தாதியைத், தகவித ரங்களிற் சாத்தவவ் 23
வைந்தாம்.

புகலவற் றண்டமும் புவன போக்கிய
நுகர்வமர் தனுவுமா நவலிவ் வாக்கையிற்
றகவிராட் டாகும்பொன் கருப்பன் றைசத
னகமுறு விசுவன்றே வாதி யாவனுல். 24

அவர் பகிருணர்வின ராகி வேறுளிர்
எவமறு தத்துவ போத மில்லராய்க்



கவர்தரு நுகர்வுறக் கரும மாற்றுவர்
தவறறப் பயனையும் தாம்பு சிப்பரால். 25

நதியுறு புழுச்சுழி தோறு நண்ணியே
கதிபெறு தெனவவர் கடுகி யோர்பவத்
திதியொழிந் தோர்பவத் திதியை நண்ணி
யதிகதுக் கந்தனை யடைவ ரென்பவே.[யே

புண்ணிய முதிர்ச்சியாற் புகன்ற வப்புழு
தண்ணளிச் செல்வராற் சார்ந்து தீரமேல்
வண்ணமென் றளிர்விரி மரத்தி னீழலை
நண்ணியே தளர்ச்சிபோய் நன்கு மேவுமால்.

வஞ்சமி றத்துவ ஞான மன்னிய
தஞ்சமாங் குருவுப தேசஞ் சார்ந்துபின்
பஞ்சகோ சங்களின் பகர்வி வேகத்தா
லெஞ்சலில் சுகமவ்வா றிசைந் திருப்பரால்.

அன்னமு முயிர்மன மறிவு மானந்த,
மென்னுமைங் கோசமா மிவற்றி னுன்ம
றைந், தின்னறீர் தன்னுரு வெனச்சொல்
லாற்றுமா, தன்னுரு மறதியாற் சார்வன்
வன்பவம். 29

பஞ்சமா பூதத்தாம் பருத்த வாக்கையே
யெஞ்சலி லன்னமா மிலிங்கத் தேய்வுறும்
விஞ்சிரா சதத்தெழு மிகுபி ராணனு
மைஞ்சுங்கன் மேந்திய மமர்பி ராணமாம்.

சத்துவத் தெழும்புத்தீங் திரியங் தன்
னுடன், செத்துரு மணமுமே சேர்ம னோமை
யம், புத்திவிச் சயவருப் போந்த வற்றெரு
டே, சுத்தவிஞ் ஞானமாச் சொல்லுங் கோச 31
மாம்.

ஓதுகா ரணத்துறு மொளிசெய் சத்துவ
மோதமுன் விருத்தியு மொழியு மாநந்தஞ்
சேதன வாற்றுமா செறிந்தக் கோசத்தோ
டேதவம் மயமுமா யிருப்ப னென்பவே.

மன்னுடம் பாடெதிர் மறையி னூவ
மாங், துன்னுமைங் கோசத்தின் றொடர்வி
வேகத்தாற், றன்னதான் மாவினைத் தானு
ணர்ந்துமேற், பின்னமில் லாப்பரப் பிரம 33
மாகுமால்.

கனவினிற் றாலமெய் கண்ணுரு தெனுங்
தனதுரு வொளிர்வது தனது டம்படா



மணகமாங் தன்னுரு வவிர்வ தென்னினும்
பினவுட லெதிர்மறை பிறங்கி டாமையே.

சூக்கமெய் மறையினுஞ் சுழுத்தி யிற்றன
தூக்கமாங் திகழ்வுடம் பாட தாகுமா
னீக்கமா மெதிர்மறை நிகழி னுஞ்சொய
மூக்கமாஞ் சூக்கமெய் யொளிர்வு றுமையே.

உயிர்மன முணர்வென வோது கோசமும்
பயிலுமத் தேர்ச்சியாற் பகுக்கப்பட்டன [ன்
குயிலவை யாண்டன்றே குணவ வத்தையி
வியனுறு பேதத்தின் வேறு பட்டன. 36

மறையினுஞ் சுழுத்திதா மனுஞ்ச மாதியி
னிறைவுறு மாற்றுமா நிகழ்வ தன்வய
முறைவெதி ரேகந்தா னொளிர்வ தாகினு
மறையுமச் சுழுத்திதோன் றுமை யாதுமே.

முஞ்சத்திற் பசும்புற்போன் மொழிநல்
லுத்திகொண், டுஞ்சிடுங் தீரரா லுடல மூன்
றினின், றெஞ்சலில் வாற்றுமா வெடுக்கப்
பட்டிடின், விஞ்சிடு பிரமமாய் விளங்கு
றுஞ்சொயம். 38

அத்தகை பராபர வாற்று மாக்கிளி [த்
னுத்தியா லுட்கொளு மொருமை மற்றினி
தத்துவ மசிமுதற் சாற்றும் வாக்கிய
வத்துவாம் பாகங்கண் மனுந்தி யாகத்தால்.

வத்துதா மதகுண மாயை தன்னையே
யொத்துபா தானமா மூலகி னுக்கெலாஞ்
சுத்ததத் துவமதைத் துணிவி மித்தமாந்
தத்தெனும் பதமது சாற்று றும்பரம். 40

இலகுறு மப்பரப் பிரம மெப்பொழு
தலகறு காமகன் மாதி நிந்தைசேர்
மலினசத் துவமதை மருவு மப்பொழு
துலேவறுந் தொம்பத முரைக்கும் வத்துவாம்.

மும்மையாய்த் தனித்தனி மூழுவி
ரோதியா, மைம்மல மகற்றியே வயங்க கண்
டமாந், தம்மயச் சச்சிதா நந்த தற்பரஞ், செ
ம்மைமா வாக்கியஞ் செப்பும் வத்துவாம். 42

மன்னிய சோயமாம் வாக்கி யங்களிற்
பன்னிய வதனிதன் பகைத்தி ரத்தினுந்
றுன்னிய பாகங்க டுறத்த லாலொரு
தன்னிய லிலக்கிய மாமித் தன்மைபோல்.



பரனொடு சீவர்க்கும் பகரு பாதியா,
விரவுமா யையுமவித் தையையும் விட்டுமே
ற், றரமறு மகண்டமாஞ் சச்சி தாநந்தந், திர
மகா வாக்கியஞ் செப்பும் வத்துவாம். 44

இலக்கியஞ் சவிகற்ப மாகு மென்னிலோ
விலக்கியந் தனக்கசத் தியம்வந் தெய்துமே
யிலக்கிய நிருவிகற் பகம தென்னிலோ
விலக்கியங் கண்டில மினியுண் டாகுமோ.

சோனவிகற் பகநிரு விகற்பந் தோய்ந்
ததோ, மனுஞ்சவி கற்பகம் வாய்ந்த தாங்
கொலோ, மூனமதேற்பொய்ம்மையா மொழி
மற் றுமெனி, லனவத்தை யான்மவா சிரய
மா தியாம். 46

இதுகுணங் கிரியையு மியைந்த சாதியென்
பதுந்திர வியமுஞ்சம் பந்த மைந்தினும்
பொதுவத னுலிங்குப் புகலு மீதெலா
மெதுவடி வதனிடை யிருக்கு மென்கவே.

நேடுவி கற்பமு முதனிக முபாவமுந்,
தொடவரும் பொருட்கணே சொலும் விகற்

பிதந், தடையகற் றிலக்கியத் தன்மை சம்ப
ந்த, மடியெலாஞ் சொரூபத்தி லத்தி யாச
மே. 48

இத்திறம் வாக்கியத் திதன ருத்தத்தின்
சத்தியத் தேர்ச்சியே சவண மாகுமா
லுத்தியாற் கேட்டவத் துடைய சிந்தனம்
வத்தியா நிற்குமோர் மனன மாகுமே. 49

அவ்விரண் டானுமே யய்ய மின்றிய,
செவ்விய பொருளிலே திதித்த சித்தத்தின்,
றிவ்விய வொருமைத்தாய்த் திகழுஞ் சிந்
தையே, தவ்விகழ் நிதித்தியா சனமென்
றோதுப. 50

நினைபவ னினைவையு நெறியி னீக்கி
யே, யுனவுரித் தொன்றையே யுணரு நெஞ்
சகம், புனைதரு நிவாததீ பத்தைப் போலு
மே, தனைநிகர்த் தொளிர்வது சமாதியென்
பரால். 51

தனையுணர் விருத்தியத் தருணந் தோ
ன்றுறு, தெனினுமே லெழுந்தவற் கெழுந்



க ருத்தினு,லனுமித மாமவற் றூக்க முன்
னல, முனுஞ்சமற் காரமோ டுறைத லாமெ
ழும். 52

வித்தகைத் தாம்விளக் கென்ப தாதியாற்
பத்தனுக் கிதைமிகப் பகவ னோதினு
னித்தினுற் சஞ்சித கருமம் யாவும்போ
முத்தமச் சுத்தமாந் தரும மோங்குமே. 53

பரிமித மின்றியிப் பகர்ச மாதிதான்
சொரிதலிற் றருமமாஞ் சுதைநற் றூரைகள்
விரிதரு தருமமா மேகமா மென்பா
ருரியதாம் யோகமிக் குணர்ந்துளோர்களே.

சொல்விது வாதனைத் தொகுதி மாயமாய்த்
தில்லெனக் கருமவே ரீர்க்க வாக்கிய
மல்லறீர்ந் தன்றுள தங்கை நெல்லிபோ
னல்லப ரோக்ஷஞா னத்தை நல்குமே. 55

தேசிகன் மொழிவரு சிவநற் போதமே
மாசிகி யெனமதி மறமெ லாஞ்சுடு
மாசிகழ் தன்மய வறிவஞ் ஞானமா
மாசிரு ணூறிடு மதியப் பானுவாம். 56

இப்படித் தத்துவத்தி னெறிலுற வி வேகஞ்செய்தே, யொப்பற விதிதப்பாம லுளத்தினைத் திரமதாக்கி, வெப்பமை பவ பந்தத்தை விடுத்துள ளுகிமேலாஞ், செப்பு ரும் பதத்தைப்பூமான் சீக்கிரஞ் சேர்வ னன்றே. 57

முதலாவது

தத்துவ விவேக முற்றிற்று.



இரண்டாவது

## பஞ்சபூத விவேகம்.

சத்தொ டத்துவிதமென்னச் சாற் றுறு பொருளைம்பூத, வுத்தம விவேகந் தன்னு லுணர்வுற வெளிய தாமற், றித் தினு லதன்விவேக மியம்புகே மிதன்குணங் கள், சத்தமூ றுருவத்தோடு தகுசுவை கந்த மாமே. 1

ஒன்றிரண் டொருமூன் ருேர்நான் கோ ரைந்து குணம்வா னுதி, துன்றிடு நெறியே வானிற் ருெனியெதி ரொலியாங் காற்றின், றன்றிறம் வீசி யோசை தகுகுளிர் கொதி ப்பி லூரும், வன்ருெனி புகுபு கென்னும் வன்னியின் வெம்மை காந்தி. 2

சேலஞ்சுலுசுலுவென்ருேசை சீதலம் வெண்மை தீயம், நிலம்கட கடவென்ருே சை நேர்தரு கடின மூறே, பலவுரு நீல மாதி பகர்சுவை மதுரமுன்னுங், குலவுறு மிருமைக்கந்தங் குணமிவை வகுத்து ரைத் தாம். 3

சோத்திரந் துவக்கே சட்சு சொற்றி
டுஞ் சிகுவை கிராணம், பூத்தவிந் திரிய
மைந்தாம் புகுமிடங் காதேயாதி, யேத்தசத்
தாதிகாணு மிதுமுறை சூக்கு மத்தாற்
கோத்த காரியத்தான் மேயங் குணம்பகி
முகமேயாதல். 4

சிரவமே புதைக்கி னோர்காற் செடார
வக் கினி பிராணன், மருவக வொலிநீரன்ன
மாந்திடி னுண்ணி னூறு, மிருவிழி மூடி
னுள்ளா ரிருளுமுக் காரஞ் செய்யிற், றெரி
தலிற் சுவையே கந்தம் பொறிக்ககத் தெரி
வுமுண்டே. 5

அள்ளினைப் புதைக்கி னோர்கா லகட்ட
ழற் பிராணன் றன்று, முள்ளொலி கேட்
குந் தோய மோதனம் பருகி னுண்ணிற்.
கொள்ளுமுட் பரிச மூடிற் குறிக்குமுன்
னிருளுக் காரத், தெள்ளுறு மிரதங் கந்த
மிதிற்பொறிக் குளதுட் போதம். 6

சாற்றுத லீத லேக றள்ளுத லின்பஞ்
செய்த, லாற்றுமைந் தொழிலிவ் வைந்தின்
ளடங்குறு முழவே யாதி, தோற்றுகா ரண
மாம் வாக்குத் தோள்பதம் பாயு பத்தம்



போற்றுகன் மேந்தி யங்கள் புகுமிட முக
மே யாதி. 7

மனந் தசேந் திரியகத்தா மனுமித
யாம்பு யத்தே, யினையதுட் கரண மாகு
மிந்திரி யங்க ளின்றித், தனிமையாய்ப்
புறத்தெஞ் ஞான்றுஞ் சார்ந்திடா தாத
லாலே, துனினவை புலன்க டம்மிற் சுபா
சுப நாடு மீதே. 8

இதன்குணஞ் சத்து வாதி யிவற்றினாற்
றிரிபா மன்றோ, வுதயமாஞ் சத்து வத்தி
லுதாரமு மிராசை சாந்தி, முதலவுமிரசதத்
தின்முயற்சியுமுலோபங் காமங், கதமுமத்
தமத்திற் சோம்பர்களிப்பதி மயக்கமன்றே.

சத்துவங் களினாற் றோன்றுந் தரும
மே பாவமுண்டா, மத்திமங் களின லேதா
மதங்களா லிரண்டு மின்றி, யொத்தவோர்
வாணுள் வாளா வொழியுநா னென்னும்
போதன், கத்தனென் னுலகி லிங்ஙன் கழ
றுவ ரெவரு மாதோ. 10

இலகொலி யாதி வாய்ந்த விலைபவு
திகமாந்திண்ண, மலகினூலுத்தி தம்மாலக்
கமா தியுமற் றென்கப், புலன்பதி னொன்
றோ டுத்தி புனிதநூ லிவற்றுற் காணு?
முலகம தனைத்து மீதென் றுரைத்திட
நிகழு மன்றே. 11

ஈதெலா முனஞ்சத் தேயா மேகமே
வாத்து வீத, மேது கொன் னாமரூப மென்
பதா ருணியின் வாக்காம், பாதவச் சுகத
பேதம் பழமல ரிலையி லாந்தன், சாதிமற்
றொன் றொன்வேறு சாதிகல் லாதி யாலாம்.

அப்பரி சுண்மைக் காமுப் பேதமு
மடைவி னீக்குந், திப்பம ரயிக்கந் தேற்றந்
தொய்தநீக் கமதி வற்று, எப்பொருட் குறு
ப் புண்டென்ன லங்கிச மன்னாமை யாலே,
செப்புறுப் புருப்பே ராகாச் செனித்திடா
மையினிப் போதும். 13

பெயருருத் தோற்ற மேயாம் பிற
வியா தலினுண் டாமுன், னயனமற் றவற்



றக் கின்று மாயையா னிரங்கி சந்தா, னாய
ருண்மை விசும்புபோலு முண்மையந் தரந்
தன் சாதி,யியலுரு விலட்சணந்தா னிசை
ந்திடா மையினு லன்றே. 14

ஒன்றிய நாமரூப வுபாதியே தத்தை
யன்றி, யின்றுசத் தினுக்கே பேத மில்லது
விசாதியந்தா, னென்றுமுண் டென்னத்
தோன்று தெதிர்மறை யன்மையாலே,பின்
றபு விசாதி யத்தாற் பேதமெவ் வாறு
மன்றே. 15

ஏகமே வாத்தொய் தஞ்சத் தென்பது
சித்த மங்கே, மூகரி தசத்தே யாகி முன்
னின்ற தெனவன் னித்துச், சாகரத் தாழ்ந்
தோர் கண்க டமிற்கலங் குவரின் னோருண்,
மாகவ் னொன்றைக் கேட்டு மாறியின் னதி
னின் றஞ்சும். 16

இங்குயர் நிருவி கற்பத் திரயோ
கியர்க்கூங் கச்சந், தங்குமென் றுரைத்தார்
கௌடா சாரிய ருயர்சமாதிச், சங்கம தெ

ளிசோ யார்க்குந் தனிமையா மபயித் தஞ்சு,
மங்கயோ கியர்மற் றீதி னதிபய மடைவ
ரன்றே. 17

பகவற்பூச் சியநற்பாதர் பரமதிற் பசை
யி றர்க்க, விகலுறு மாத்தி மீக ரிருண்டன
ரென்றார் வேதச், சிகையினை மூகத் தோவி
த் தித்தராம் பவுத்த ரான்மா, தகையனு
மானக் கண்ணே சார்ந்துள ராயின் றென்
பார். 18

சூனியஞ் சத்தோ டொத்தோ சொன்
னின்ற ததுதா னுயோ. சூனியத் தினுக்கி
ரண்டுந் தோய்வுறு விரோதந் தன்னுற்,
சூனியத் தமத்தோ டொன்றான் சூரியன்
றமமு மாகான், சூனியஞ் சத்துந் தெவ்
வாஞ் சொன்னின்ற ததுவெவ் வாறே. 19

வானமா திகளி னும்ம வடிவங்கற் பித
மாஞ் சத்திற், சூனிய நாம ரூப மற்றெ
னிற் சுகிநீ ணு, ஊனசன் னும ரூப மற்
றெனி னிங்கென் றேது, தானிரா தார
மோகஞ் சார்ந்ததோ ரிடத்துங் காணேம்.



இருந்தது சத்தெ னுஞ்சொல் விருமை
யேற் றுவித மாகு, மொருமையேற் சொன்
னதோத லொழிகவீ துலகிற் கண்டேம், புரி
வது புரிந்தான் வாக்குப் புகன்றன னென்ப
தாதி, பரவுவா தனையுற் றேனைப் பார்த்து 21
மெய் யிருந்த தென்னும்.

காலவா தனைசேர்ந் தோனைக் கரு
தியே காலா தீதத், தேலவே யெனுமிச்
சொல்லா லீண்டுதொய் தமதுண் டென்
னேற், சாலவுங் கடாவ லோடுத் தாங்தொ
ய்த மொழியி னேதற், பாலவத் துவிதப் 22
பேச்சிற் பகரலை யிரண்டு மின்றே.

எண்டரு மலவு தோற்றம் பெயரெலா
மின்றி யாழ்ந்து, தண்டலி விருடேசின்றித்
தனித்தவோ ருண்மை நிற்கு, மண்டுறு தவ
னி யாதி யணுவரை நசித்த லாலே, விண்
டபு மெனலெவ் வாறும் மேதையிற் படு 23
மென் பாயேல்.

உலகமாத் திருந்தீர் வான முன்மதி
தனைச்சார்ந் தாங்கே, யிலகொரு நிரம்ப ரச்

சத் தென்மதி சோரா தேனே, புலமுறப் பெறுமவ் வானேற் புகலொளி யிருணீத் தெங்கே, யலதுநின் பக்கத் தாமோ வம்ப ரம் பிரத்தி யக்கம். 24

புனிதமெய்ப் பொருளு மெல்லாம் பொருந்தநிச் சயமாக் கண்டேந், தனிநிலை தனி லபாவந் தானிலை யனைய துண்டென், றுனுமுணர் வின்மை யாலே யுண்மையி னுாமு மின்று, மெனினது வேண்டே மூண்மை யிலகிநிற் றவினுற் றுனே. 25

மனமிலா நிலைக்கே சாட்சி மாத்திர மாத லாற்சத், தனைவரு மெளிது சேர வகம்விரி வுறுமுன் சாட்சி, மனநிரா குல மெவ் வாறே மாயையே விரியு முன்னந், தனிமையாஞ் சத்தவ் வாறு தானிரா குலமா மன்றே. 26

அதத்துவ மேயாய்க் காரி யத்தினு லறிவ தாமத், திதப்பொருட் சத்தி மாயை செஞ்சுடர்ச் சத்திபோலும், மதத்தது காரி



யந்தான் வருமுன முணர்தற் காகா, நிசப் பொரு ளலவச் சத்தி நெருப்புத்தன் சத்தி யாமோ. 27

உண்மையின் வேருஞ் சத்திக் குருவம தேது சொல்வா, யெண்மையிற் சூனி யத்தி னியலெனிற் சூனியந்தான், றிண்மையின் மாயை யாலே சேர்ந்ததென் றிசைத்தே முன்ன, மண்மையி னசத்துஞ் சத்து மலவி தன் னுருவென் றேசொல். 28

அசத் ததுஞ் சத்துநின்ற தன்றுமுன் றமமற் றுகு, நிசத்தினெற் றுமையா லன் றி நிற்பது தமத்துக் கில்லை, வசைத்திற மதனு லின்மை மானவே றுண்டென் றெண்ணே, மிசைத்தசித் திரிகன் சக்திக் கிருக்கைவே றென்ன லாமோ. 29

சத்தியின் பெருக்காஞ் வாழ்க்கை தழைக்குமே லதற்கு மூலஞ், சத்தியன் றுமச் செய்கை சமுருழ வாதி யாம்போற், சத்திமாத் திரத்தெவ் வாற்றுங் தனுவும்

வேற்றெண்ண மின்றுஞ், சத்திகா ரிய மேயில்லை சாற்றுதி பினமெவ் வாறும். 30

பிரமத்தோ ரிடத்த லாது பிறங்குரு தன்ன தெங்கும், வருகுட சத்தி மென்மை மண்ணினி னிகழு மாபோ, லொருபத மனைத்தா மீதி னொளிருமுப் பதமற்றுண்டு, சுருதியோ ரிடத்து மாயை தன்னிடு மென்றுஞ் சொல்லும். 31

இவ்வுல கெல்லா மோரங் கிசத்திடை யிருத்தி நிற்கேன், பவ்விய பார்த்தவென் றுன் பகவன்மற் றவனியெங்கு, மெவ்வியங் குலங்கள் பத்தாய் விகாரமு மின்றி நிற்பன், றிவ்விய னெனவே யோதுந் திகழ்மறை வியாசன் வாக்கும். 32

நிரங்கிசத் தங்கி சத்தை நிறுவியே யெங்குமென்று, வரம்பயில் வேதமோதும் வத்துவின் சத்தி மெய்யிற், றாம்பெற வெல்லாஞ் செய்யுஞ் சார்நிறஞ் சுவரின் கண்ணே, திரம்படப் பலவகைத்தாம் சித்திரஞ் செறித்த லொக்கும். 33



ஆதியின் விகாரம் வானு மதனியல் வெளியே யாகு, மாதிர மூண்டென் றுண் மை வடிவமா திரத்து மெய்து, நீதிவத் தியல்பொன் றுருமிருமைநீர் மையதுவாது, மோதிய வெளிமெய் யில்லை யும்பர்மெய் வெளியு நிற்கும். 34

அன்றியும் பிரதி யோசை யம்பர குண மவ்வோசை, யின்றிமெய் யொன்றும் வான மெதிரொலி மெய்யுங் கூடும், முன்றரு வானச் சத்தி முடித்துமெய் வானு மொன் றுப், பின்றிகழ் தரும தன்மிப் பெற்றியுந் திரிபாச் செய்யும். 35

வானியல் மெய்யிற் றங்கும் வானிடை மெய்ம்மை கொள்வர், தானுல கருந்தார்க் கிகர் தமத்தினுக் குரித்த தன்றே, மேனி லை மானத்தாலே விளங்குமற் றதுமோ கத்தி, ஞனிகழ் தருமிந் நீதி யகிலர்க்கு மடுத்த தாமே. 36

இன்னண முனஞ்சேர் வத்து வெண் ணின்மா றுறுமா லவ்வா; னுன்னுக வானுஞ்

சத்துமொன் றலச் சத்தம் புத்தி, தன்னின்
வேற் றுமையான் வாயு வாதியிற் றழைக்
குஞ் சத்தே, யென்னவம் பரந்தான்றோன்
றா தெனவரும் புத்தி பேதம். 37

திகழுமெய்ப் பொருளெங் கண்ணுஞ்
செறிதலிற் றருமி யாகும், ககனமாந் தரும
மெய்யைக் கழற்றின்வான் வடிவம் யாது,
புகல்வெளி யுருவ மென்னிற் பொய்ம்மைய
தெனத்தேர் மெய்யி, னகல்வது பொய்ம்மை
யன்றே லதுநினக் கிடையூ றாமே. 38

இலகுமே லிலக மாயைக் கிலையதா
மின்மை தோன்றற், புலமறு கனவின்
வேழ மாதிபோற் பொய்ம்மை யாமாற், குல
வலின் வியத்தி சாதி குணகுணி தேகந்
தேகி, நிலவுவான் மெய்யும் வேறா நிற்குமற்
புதமிங் கென்னே. 39

தேரியினும் பேதநெஞ்சிற் றேற்றம்
வந் திலதென் பாயேற், றிரிபிலா னையத்
தானோ தேற்றமின் மையது நீசொல், தரி
சம நிலை தியானத் தான்முனை தேல்வி சாரம்,



புரிதிமற் றெனின்மா னத்தோ டேகத்தாற் 40
பொருந்துந் தேற்றம்.

சித்திர மெய்யின் பேதந் தியானமா
திகளாற் றேறிற், சித்திர மனிசம் பொய்ம்
மை செம்பொரு ளதுபோ லாகாச், சித்தி
ரம் பொருளன் றாகித் திகழ்ந்திடு மறிந்தோ
னுக்குச், சித்திர மிலதா யென்றுஞ் செம் 41
பொரு டிகழுந் தானே.

அனையவா தனைவ ளர்ந்தாலறிஞன்வா
னிசமென் பானைத், தனிநிசபோத மில்லான்
றனையுங்கண் டதிச யிப்ப, னினையவான்
மித்தை சத்தே யிருப்பதென் றறிந்தா
லிவ்வா, றனிலமே முதல வற்றி னழிவி 42
லாப் பொருளைத் தேர்வாய்.

அழிவிலாப் பொருண்மேன் மாயை
யதினிடைவான மவ்வா, னுழிமருத் தேக
தேசக் கற்பித மாய்நின் றொல்கும், கழிதரு
பரிசம் வேக கதியிவை தரும மாங்காற்,
றிழிவின்மெய் மாயை வான மிவற்றின்மூ 43
வியல்பு மேவும்.

மருத்துள தெனல்சற் பாவு மருத்தி
டைச் சத்தை நீக்கிற், பொருட்படா மைய
து மாயை புகுமொலி வியோம நீர்மை,
யிருக்குஞ்சத் தெங்கும் வான மியைவுறு
த் தென்றிங் கவ்வா, றொருப்படு மென்றீ ரிச்
சொல் லொவ்வாமை யெவ்வா றன்றும். 44

சித்திர மூனமெங் கண்ணுஞ் செறி
வுறு தென்றே மிங்குச், சத்தமே செறியு
மென்று சாற்றினே முரணெங் கேயோ,
வத்துவைப் பிரிக்கிற் பொய்யேல் வாயுவவ்
வியத்த மாயைக் கொத்துறு மையினற்
றன்று மென்பதே னெவ்வா தென்னின்.

மாயையின் பயனிங் குண்மை வடி
வின்மை யதுசத் திக்கண், ணுயகா ரிய
த்து மொக்கு மவியத்தம் வியத்த மாகு,
மேயசத் தசத்தின் றேர்ச்சி வேண்டுமிங்
கதுவே செய்வாய், நீயசத் திடையார் பேத
நினைவொழி யதினிங் கென்னே. 46

நிலைமைதான் பிரமஞ் சிட்டம் நிழலி
வான் போல மித்தை, யலைவற விதனை



நீஞ்ஞ ளனுட்டித்து மருத்தை நீப்பா,யுலவை
யிற் றூழ்வரம் வன்னி தனையுமிப் பரிசே
யோர்வாய், தலைமைதாழ் விவற்றின் றேர்
ச்சி தாம்பிர மாண்டத் துள்ளே. 47

ஊதையிற் பதின்பங் கஃகு மொளிமரு
த்தூடு தோற்றும், பூதபஞ் சகத்தின் றார
தன்மியம் புராணங் கூறுஞ், சோதியுட்
டணர்ந்தீ மேனி சொலுமூல குணமுஞ்
சாரு, மோதஃ துண்மை யின்மை யோசை
யூ றுடையதாமே. 48

சத்தொடு மாயை வான்கா றம்முறுப்
புறுத்தீ ரூபம்,யத்தின்மெய்யதின்மற்றெல்
லா மறிவினுற் பிரித்து மெய்யை,இத்திறம்
வேறுக் கித்தீ யிலதென வழுந்திற் றெண்
ணீர், பத்திலொன் றருகி வந்த பண்பினைச்
சிந்தை செய்வாய். 49

நீரிடை யுண்மை யின்மை நிகழொலி
யூறு ரூப, நேருவ திதர தன்ம நிசகுண
மிரத மாகுஞ்,சாரிருப் பதைப்பிரிக்கிற்றண்

மித்தை யென வழுந்திற், பாரதிற் பதின்
பங்கெஞ்சி வந்தபண் பிணைச்சிந் திப்பாய்.

பூமியி னுண்மை யின்மை புகுமொலி
பரிசத்தோடு, தாமுரு விரதமூல தருமமா
ரசகு ணந்தா, னேமுறு கந்த மாகு மிவற்
றின்மெய் யிணைப்ப குப்பா, யாமதைப் பகு
க்கின் மித்தை யாய்மிஞ்சும் பூமி தானே.

அவனியிற் பதின்பங் கெஞ்சி யாங்கு
றும் பிரமாண்டத்திற்.புவனமீ ரேழு மீங்கே
பொருந்துறு முயிர்க டேக, மிவைகளின்
மெய்யை நீக்கிலிலங்கும்பொய்யாய்மற்றெல்
லாம், மவைகளீங் கிலங்கி னுந்தா மானி
வந் துறுவ தென்னே. 52

பூதபவு திகமே மாயை பொய்ம்மை
யென் றுள்ளந் தேறி, னேதுந்தீர் பொரு
ளொன் றேயா மெனுமதி மாறு தென்றும்,
பேதமாம் பூமி யாதி பிரியின்மெய் யொரு
மை யாலே, யோதந்தப் பொருட் கன்மந்தா
னுலகினவ் வாறே தோற்றும். 53



ஸாங்கியன் முதலா னோர்கள் சகப்பே
தம் பலவு கித்தா, லீங்குரைத் திடுவ ரவ்வா
றேற்குமற் றவர்க ளைய, நீங்கமெய் யொரு
மை யோரா நெறியினைப் பேதங் காணே,
னாங்களா தலினெ மக்கு நண்ணுறு மானி
யென்னே. 54

துவிதசிந் தனைமாய்ந் தாலத் துவித
சிந் தனைதான் றேறும், புவியிலத் திதிவ
லுத்த புருடனே சீவன்முத்த, னவிலிலித்
திதியைப் பார்த்த வண்டிநீ மோகந் தீர்ந்து,
தவிர்தரு பொழுது மன்னித் தற்பதந்
தனைச்சார் வாயே. 55

ஒன்றெனு மெய்ம்மை பொய்ம்மை
யுறுந்தமி னொருமை ஞானம், பொன்றுறு
பொழுதப்பேத புந்தியே யாமற் றன்று,
மன்றியப் பொழுது சீவ னகல்வதும் பிர
சித்தந்தா, னின்றவப் பொழுதுமோக நீக்
கின்மேற் பிறப்ப தின்றே. 56

நோயில னுய்கின் றேனு நோயனுற்
சுழன்று மூர்ச்சை, யாரெனும் பிராணன்

விட்டிங் கவன்மய லுறுனெவ் வாற்றுந்
தோய்வுறுங் கல்வி நாளுஞ் சொப்பன துயி
லிற் போயு, மாய்வுறு மறுதி வாவிவ் வகை
யறி வழிவு றுதே. 57

மானத்தால் வந்த ஞான மானமேம்
பாட்டா லன்றி, யீனமா காவே தாந்தத்
தேற்றமா மான மின்று, மானதால் வேதாந்
தத்தா மத்தொய்தப் பொருண்மாய் வாகா,
தூனகா லத்தும்பூத விவேகத்தா லுறுநன்
முத்தி. 58

இரண்டாவது
பஞ்சபூத விவேகம்
முற்றிற்று.





மூன்றாவது
## பஞ்சகோச விவேகம்.

துகையிலுறும் பிரமமதைக் கோசமைந்
தின் விவேகத்தாற் குறிக்கலாமித், தகை
மையினு லங்கோசந் தனைப்பிரித்துத் தெ
ரிக்கின்றேஞ் சரீரந் தன்னி, னகமருவும்
பிராணனதற் ககமாகு மனமனதுக் ககமாங்
கத்தன், புகலதற்குட் புசிப்பானு மொன்றற்
கொன் றிதுகுகையாப் புகல லாமே. 1

தந்தைநுக ரன்னத்தாம் வீரியத்திற்
சனித்தன்னத் தாலே நீடு, மிந்தவுடம் பன்
னமய மீதான்மா வலமுன்பின் னின்மை
யாலே, முந்தையுறு பவத்தின்று மாதலி
ளிப் பவமெங்ஙன் முயன்று நேடும், பிந்தை
வரு பவத்தின்று மாதலினிங் கீட்டுகன்மம்
பேறற் றேதும். 2

யா துடலிற் பூரணமாய்ப் பெலந்தந்
திந் தியங்களைத்தா மியக்கா நிற்கு, மூதை

யது பிராணமய மிதுவான்மா வன்ருகு
முணரா வாற்ரு, லேதுடலி லகந்தையுறுங்
கிரகாதி தனின்மமதை யிசையு மிந்த, வோ
துமனே மயமான்மா வன்ருகுங் காமாதி
யுறுத லாலே. 3

மன்றசுழுத் தியிலடங்கி நனவினக
சிகைகாறு மன்னு நிற்கு, மொன்றறிவின்
சாயைபெறு மதியதுவிஞ் ஞானமய முண
ர்வா காவாங், தன்றுமந்த ரிந்திரியங் கருத்
தகா ணத்தியல்பாற் றுன்னும் பேத, நன்
றறிவு மனமதுவுந் தனித்தனியே யகம்புற
மாய் நணுகு மன்றே. 4

அறநுகரும் பொழுதெணமொன் றக
முமா யாநந்த நிழலை பண்ணு, மிறநுகர்வு
நித்திரையா வொடுங்கிடுமா னந்தமய
மீதோர் காலத், துறுதலினு லலவான்மா
விதன்விம்ப மயமாகி யொளிரா னந்த,
நிறைவெதுவா மதுவான்மா வாகுமன வரத
முமே நிகழ்வ தாலே. 5



தேகாதி துயிலாநந் தங்காறு முறு
பொருள்கள் சேத னந்தா, ஞகாவன் னிய
மொன்றுங் காண்குகிலே னென்பாயே
லவைக ளெல்லாம், வாகாக்கண் டனனிதாங்
கரிண்கிலனென் பதுமிசமா மற்றற் றேனும்,
போகாவெத் தாலவைகா ணப்படுவ வதனை
யெவன் போக்கு வானே. 6

அனுபூதி மயமதனுற் ருனுகி யேயி
ருக்கு மறியொ ணுதா, மெனலுணர்வா
னேடுணர்வும் வேறிலா மையினன்றி யில்ல
தாலன், றினிமைமுத லியவடிவா யிதாங்
கட் கவைகொடுக்கு மெவைக்குந் தன்பா,
லனையவிய னேடுவமா விலையவற்றை யளி
ப்பதுவா மயலு மின்றே. 7

௨ தருபொருள்வே றிலதேனு மவைகண்
மது ராதிகுணந் தமைநீங் காவா,லொருதனு
ரு வான்மாவு மறியவொணு தெனினுமுண
ர் வீருவை நீங்கா, புருடனிவன் சொயஞ்
சோதி யாகுவனீ தனைத்தினுமுன் பொலி

வன் மின்னு,முருவவவன் றனை மருவி யொ
ளிருமெலா மவனொளியா லுலகந் தோன்
றும். 8

அறிபடுமீ தனைத்துமெவ னுலவனை
யயலெதனு லறிய லாகு, மறிவுயர்வான்
றனையெதனுற் றெரிந்திடலா மனம்விடயத்
தாற்றல் சேரு, மறிவனவன் விடயமெலா
மவன்றனக்குப் பின்னமதா வறிவா னின்
று, மறிவுவடி யறிபடும்வத் தறிபடாவத்
தினுக்கு மயலா மன்றே. 9

போதமது தனிலுமனு பவமெவனுக்
கெவ்வாற்றும் பொருந்து றுதோ, வோது
மந்த நரவடிவா மோட்டினையெவ் வாறுநன்
னூ லுணர்த்து கிற்குஞ், சீதமுறுஞ் சிகு
வையெனக் குளதிலதோ வெனும்வசனஞ்
சிரிப்புக் காம்போல்,மேதையையா னறிந்தி
லன்மே லுணர்வுறவே வேண்டுமென விள
ம்ப லாமே. 10

உலகிலுணர் வதனைவிடிற் பிரமமது
வெனுமதியே யுண்மை ஞானம், விலகினைங்



கோசமுமிஞ்சுங் கரியுணர்வே தற்சொரு
பம் வெறும்பொய் யாகா, விலகியதோர் தா
னுளதாம் வழக்கிடப்பாற் றன்மையிற்றன்
னிடத்துங் கூற, வலகில்வழக் குளதெனி
லோ விவ்வழக்கி னெதிர்வாதி யாகும்
யாவன். 11

மயலன்றித் தனக்கின்மை யாவருக்கு
மிசையாது மற்றதாலே, செயலற்ற பொய்
வாதிக் கழிவினையே யருமறைதான் செப்
புஞ் செப்பு, மயலற்ற பிரமமில தெனவுண
ரிற் றானேயில் லாதா னுமா.லியலற்ற பிரம
மறி படுவதலத் தனக்குண்மை யெய்தப்
பார்ப்பாய். 12

இத்தகையே லெத்தகைய தெனக்கே
ட்கி னித்தகைத்தா மியல்பங் கில்லை, யித்
தகையு மத்தகையு மில்லாத பொருள்வடி
வை யிலக வோர்வா, யித்தகையிந் தியவிட
யம் பரோட்சந்தா னத்தகைய தெனலாங்
காண்பா, னித்தகையிந் தியவிடயம் பரோ
ட்சமுந்தா னலத்தானு யிருத்த லாலே. 13

வேத்தியமன் றேனுமப ரோட்சமதா தலிற்ருனுய் விளங்குவோன் ருன், சாத்திய மாம் வாய்மையறி வனந்தமெனும் பிரம வியல் தன்னி லுண்டு, பாத்தியமில் லது வாய்மை செகப்பாட்டுக் கொருகரிக்குப் பாடிங் கேதோ, வேத்தியவக் கரியாது சொ ல்லுதியப் பாடென்ற மிசையா தாமால். 14

தோக்கவுருக் களைவிடினு மருவம தாஞ் சேண்மிஞ்சித் துன்னுமா போற், றக் கனவெல் லாம்விடின்மே லெதுசேடித் தி ருக்குமது தானே தானு, மொக்கவொழிந் திடினென்று மில்லையெனி னென்றுமிலா ததுவே யோமாம், பொக்கமிலிங் குரை கணனி வேற்றுமையாம் பொய்ம்மையிலா ப் பொருளே நிற்கும். 15

அதுகொண்டே யான்மாவன் றன்றெ னவே யதத்துவா விருத்தியாலே, பொது வேத மிகழ்வதனை யிகழ்ந்துபா தேயமிதை ப் பொருளாக் கொள்ளும், மிதுவென்னும் வடிவமெது வதுவெல்லா மிகழ்வுறப்பாற் றி



கழ வொண்ணு, மெதுவிதுவாம் வடிவமல வதுவான்மா வென்றமுள தென்னலாமே.

சம்பவித்த தாம்பிரமத் துண்மைநிலை ஞானநிலை சாற்றினேனன், கும்பானு பூதி மய மதனுலென் பதுமுதலா முறைகளாலே, யிம்பரெங்கு நிறைதலினித் தியத்தினு லெ ல்லாமா மியல்பி ஞனும், பம்பலிடங் காலவ த்து வாலுமுடி வாகாதப் பரமரூபம். 17

தேசமத னுடன்காலந் திரவியமு மா யையினுற் செனித்த வாலு, மாசைமுத லா னதுசெய் யந்தமிலை யாதலின்வத் தனந்த மேயா, நாசமின்மெய் யறிவனந்த மாம்பிர மமேபொருளா நணுமதற்கே, யீசனியல் சீவனிய விருமையுபா திகளால்வந் திசையா நிற்கும். 18

ஈசனிடைத் தாயொன்று யெப்பொ ருளு நியமனஞ்செய் திருக்குஞ் சத்தி, மாச திலா வானந்த மயமுதலெப் பொருளிடத் து மறைந்து நிற்கும், மேசரிய சத்தியது

பொருட்டரும நியமியா தென்றேவன்றே, நாசமுறுந் தம்மிற்றுந் தருமங்க ளொருமிப் பான் ஞாலந் தானே. 19

சின்னிழல்புக் கிடுதலினு லச்சத்தி சே தனம்போற் றிகழா நிற்கு, மின்னவுபா தி யின்புணர்வாற் பிரமமதே யீசனுடை யியல் பை மேவு, மன்னமய கோசமுனு முபா தி யெனிற் சீவனியல் பதுவு மாருந், தன்னை யன்மற் றவன்மகனைக் குறித்தொருவன் றுதைமூ தாதையாம் போல். 20

புத்திரன்முன் னோர்குறிப்பின் றெனி ற்றுதை மூதாதை புகல வில்லை,யத்திறனே யீசனுயிரிலச்சத்தி.கோசநினை வகலினன் றே, யித்திறனே யெவன்பிரம மூணர்வனி வன் பிரமமே.யென்ன லாந்தான், சத்திய வத் துவுக்கில்லைப்.பவமதனுன் மீண்டிவனு ஞ் சனித்தி டானே. 21

பஞ்சகோச விவேக மூற்றிற்று.



## நான்காவது
## துவிதவிவேகம்.



இறைவ னுலு முயிராலு மியற்றுந் து விதம் வகுத்திசைப்பாம், நிறை விவேகஞ் செயிற்சீவ னிக்கும் பந்த மேல்வெளியா, மறிக மாயை பகுதியென வண்ணல் மேலா மாயாவி, பிறிவி லவன்செய் வானென்றே பேசுஞ் சுவேதா சுவதரங்கள். 1

ஆன்மா விதுவாய் முன்னின்று னவ ன்கண் டாக்கி னுனென்றுந், தான்மா நினை வால் ஞாலமெலாந் தந்தா னென்று மிருக் கோதும், வான்மா ருதந்தீ நீர்பார்சூழ் மற் று மன்ன முடன்முறையே, யூன்மா யை யிலப் பொருளாமிவ் வுணர்வி னின் றும் வந் ததெலாம். 2

பின்னு நானே வெகுவாவேன் பிரசை யாவே னெனக்காமித், துன்னித் தவஞ்செ ய் தீன்றுனிவ் வுலகை யென்னுந் தித்திரி

தான், முன்ன மிருந்த திதுசத்தாய் மூழு
தா குவமென் றதுநோக்கி, வன்னி படைத்
தண் டசமாதி வகுத்த தென்பர் சாமகரே. 3

போறிக ணெருப்பி லெழுவனபோற்
பொலியக் கரவத் தவின்விவித, வறிவு செ
டபா வங்களுமா மென்னு மதர்வ ணச்சுரு
தி, பிறிவற் றுலகா யிருந்ததுமுன் பெய
ரோ டுருவாய்ப் பிரிந்ததுபின், னெறியுற்
றிமெற் றவைவிராட் டாதிகளிலே நிகழு
மால். 4

அவ்வி ராட்டு மனுநரர்க ளாக்கள் கர
ங்கள் பரியயங்க, ளிவ்வி தந்தான் ரெருந்த
மெறும் பீரு மெனும்வா யதநேயி, ளிவ்வி
ரூபாந் தாஞ்செய்து தேகம் புக்கா னீசனெ
ன, செவ்வி தாமம் மறைகள்சொ லுஞ் சீவ
னுவி தரித்தலி னும். 5

இடமாம் போத மிலிங்கவுட லியையும்
போத நிழலொன் றித், திடமாஞ் சீவன் ப
ரைமாயை செகஞ்செய் வலிமை யுடைத்தா
ம்போன், மடமாம் வலியு முடைத்தவனே



மயக்கு மிந்த மடமையினுற், சடமா முடலி
ன் மூழ்கியிறைத் தன்மை யொருவிச் சோ
ருவனுல். 6

இறைசெய் துவிதந் தொகுத்துரைத்
தே மேழா மனப் பிராமணந்தா, னறையு
முயிர்செய் துவிதம்வகுத் தன்ன மேழாம்
ஞானத்தோ, டுறையுந் தவத்தாற் பிதாத்தந்
தா னென்று நரர்க்குச் சுரர்க்கிரண்டா,
நிறையு மான்மாக் கொருமூன்று நியோக
மன்னம் பசுக்கொன்றே. 7

சனமாம் விரீகி யெழுவாயுந் தரிச பூர்
ண மாசங்கள், மனம்வாக் குயிருங் கிரமுமே
வயங்கே ழன்ன மென்றுணர்க, முனமோ
திறையா லிவையுருவாய் முளைத்த வெனி
னுஞ் சீவனவ்வ, யனமா நீர்மை யுஞற்றினு
னறிவாற் கரும மதனுனும். 8

ஈசன் செய்கை யுயிருணவிவ் விரண்
டோ டொருமித் துற்ஞால, நேச மகளிர்
ாதையினு னேர்ந்து பதிக்கே றுகர்வாம்

போற், பாச மாயா விருத்திமயப் பகவ னி
னைவு தங்கருவி, நீச மனத்தின் விருத்தி
யுயிர் நினைவு நுகர்வின் சாதனமே. 9

பகவா னுஞற்று மணியாதி பதார்த்த
மொருபண் பாய்நிற்க, நுகர்வான் மதிப்பல்
விருத்திகளா னுகர்ச்சி நானு விதமாகும், தக
வா மணிபெற் றவன்மகிழ்வன் சாராமை யி
ன்மற் றவனயர்வன், மிகநோக் கினுமன் ன
தின்விரத்தன் மேவா னுவகை யிடும்பையு
மே. 10

விருப்பு வெறுப்பு பேட்சையெனும்
வேறு பாடு மணிமருவுஞ், சிருட்டி யுயிரி
னுமீசன் சிருட்டி பொதுமை வடிவாகும்,
மருக்கி மனைவி மதனிமகள் மாதா வெனப்
பல் விதமாவ, வொருத்தி மாமன் முதலா
னே ருணர்வா லுருவிற் பிரிவிலளே. 11

ஆயின் ஞானம் பலபிரிவா மாகா ‘ரந்
தான் பிரிவிலதா, மேய வொருத்தி வடிவி
லுயி ரியற்றும் வியப்பின் றுமென்ன, னே



ய வொருத்தி தசைவடிவி நினைவின் வடிவி
மற்றொருத்தி, மேய தசைமே னியவளொன்
ரு மேனும் வேரு நினைவுருவி. 12

மயக்கங் கனவு மனோரதத்தால் வருசிந்
தைகளின் மனோமயமாம், வியக்கு நனவின்
மானத்தா மேய மதுவா காதெனின்மெய்,
நயக்கு மான மேயத்தா ணலின் விடயா
கிருதியாம், பயக்கும் பாடிய மும்வார்த் தி
கமுமிவ் வருத்தம் பகர்வனவாம். 13

செம்பைக் குகையின் வார்க்கவதன் றி
றமா மதுபோ லுருவாதி, பம்புஞ் சித்தம் வி
ரைந் தந்தப் பண்பாய்த் தோன்று மொளி
வெயிலுங்,கும்ப முதலி னுருவுபெறுங் கொ
ள்கை மதியும் பொருளனைத்து,மிம்பர் விள
க்கு மதனாலே யிலகும் பொருளின் வடிவா
யே. 14

மாது ருவினின் றெழுமானம் வருமம்
மான மேயமுறும், போர் து மதுமே யத்துட
னே பொருந்தி மேய நிகருருவா, மேதுவித

ஞற் கடவிடய மிரண்டா மனுரு மதியுரு வென், ருே து மனுரு மேயமதா முணர்வா லொளிரு மதியுருவே. 15

பறையு முடன்பா டெதிர்மறையாற் பந்திப் பதுயிர் மதியுருவா, முறையி னிது தான் சுகதுக்க முளதா மிலதே விலதாகும், மறையு மெனினும் புறப்பொருடான் மனு யிர் கனவிற் பந்தமுறும், நிறையுஞ் சமாதி துயின் மூர்ச்சை நோத் துறினும் விடுபடு மால். 16

தூர தேசத் துறும்புதல்வன் சுகமா யி ருப்ப வவன்றுதை, தீரப் பரவஞ் சகன்சொ ல்லாற் செத்தா னெனக்கொண் டாற்றுவ ஞற், சாரங் கவன்றுஞ் சியுமச்சொற் றுன் கே ளாமை யாரற்றுன், பாரிங் கிதனு லுயி ரையெலாம் பந்திப் பதுமா னதசெகமே. 17

பயனற் றமையிற் புறப்பொருள்கள் பௌத்த வாத மென்னினன்றும், பயனி னெ ஞ்ச வுருநேடப் பகர்வா கியமிங் குட்கொள



லாற், பயனற் றதுமாம் வாகியத்தைப் பற் றற் றெழிக்கக் கருதேமாற், பயனே விரும் பா மானங்கள் பற்று மிதுவே நிலையாகும்.

மனத்தின் றுவிதம் பந்தமெனின் மன ம தொடுங்கிற் கெடுமெதனுற், பனித்து மி யோகஞ் செயவேண்டும் பரம வுணர்வா லெ ன்கொலெனி, னனித்த மப்போ தாமெனி னு மதுபிற் பிறவா தொழிவதுதான், கனத் த பிரம வுணர்வொழிந்து கைகூ டாதென் றெுலிக்குமறை. 19

இறைவன் சிருட்டி யாந்துவித மிருப் ப வதனைப் பொய்ம்மையென, வறியிற் பிர மத் தொருமையெளி தறிதற் கொருமை வாதிகளால், வெறுமைக் காலத் ததுவொ ழிய விரோதித் துவித மிலதேனும், முறநற் குருநூன் முதவிலதா லுணர்தற் கரிதா மொருமையே. 20

அண்ண னிருமி தத்துவித மலவா தி ப்ப தாங்கருவி, யொண்ணு மதுவோ நழுவ

விதா லுறைகவேறெவ் வாறாகு மெண்ணி
ல் சீவத் துவிதமிரண் டெழினா னாலி லா
மையெண, நண்ணற் பாற்றாங் தத்துவத்தி
ன் ஞான நண்ணும் வரைநூலே. 21

சீவப் பிரம விசாரணையே செப்பு நூ
ன்மா னதசெகமா, மேவத் தகுதத் துவமு
ணரின் விடற் பாற்றதுவென் றிடுஞ்சுருதி,
மாவல் லபநூல் கற்றறிஞன் மாறி மாறித்
தான்பயிற்சித், தோவ வரிய பரம்பொரு
டேர்ந் துற்கை போற்பின் பதைவிடுக. 22

நூலைப் பயிற்சித் தறிஞன்மதி நுண்
மை மதிபெற் றவனாய்வைக், கோலை விடல்
போற் றானியங்கைக் கொண்டோ னாலை
யறவிடுகை, மேலைப் பொருடேர்ந் தந்தணனு
ம் விறலோன் பிரஞ்ஞை பெறல்வேண்டு,
மாலைத் தருமிக் கொலிகினையல் வாக்குக் க
துமிக் கிளைப்பன்றோ. 23

ஆக்க மவனே கனைத்தெரிக வயலாம்
வாக்கு களையொழிக, வாக்கை யறிஞன் மன



த்தொடுக்க வென்ப தாதி மறைதெரிக்கு
மாக்க னாலி லாமையிரு வகைதீ விரமந் த
மூமென்றே, தாக்குங் காமா திகடிவிரஞ்
சலிக்கு மனோராச் சியமந்தம். 24

போதம் பெறமெய்க் காட்சியின்முற்
புரையா மிரண்டும் விடற்பாற்றாஞ், சாதன
ங்க ளிடைச் சமையுஞ் சமாதா னமுங்கேட்
டனமதனான், மீதக் காட்சி மேலுமவை வி
டற்பாற் றரிய முத்திபெறக், காதலாதி பந்த
மொடு கலப்போன் முத்தி கலவானால். 25

சீவன்முத்தி யிதுவேண்டாஞ் சென்ம
மொழியின் யான்சுகியே, லாவதேயாம் பவ
முமுனக் கண்டருலகந் தனிற்சுகிநீ, யேவ
முறலா லழிவுவியப் பென்னும் சுவர்க்கம்
விடற்பாற்றே. வீர்வதெனுமிக் கிழிவுருவா
மிக்காமாதி கொளற்பாற்றோ. 26

உள்ள துணர்ந்துங் காமாதி, யொருங்
கே யொழிக்கின் றிலையென்னிற், கொள்
ளல் விடனா றவிருனக்குக் குறித்தபடிபோ

குதன்மேவுந், தெள்ள வொருமைப் பொரு டெரிந்தோன் சித்தப்படிபோ ருதலாமேற் றள்ளவசுசி தினிநாய்க்குந் தத்துவனுக்கும் பேதமெனே. 27

ஞானம் பெறுமுன் மனத்தீங்கா னவிவு பூண்டாய் பின்பிதுநா, ளானவகில சனநிந்தை யமைந்தா யகோகின் மதிமகிமைம, யேன முதலுக் கொப்பாத வெழிலார்மதி போய் நீவேண்டேல், மான தத்தீங் கொழிந்துலகால் வணங்கப்பெறு தி தேவனென.28

காமியாதி தீங்கோர்தல் காமாதிகள் போம்வழியாகும், சேமமுத்தி நூலிவணுஞ் செப்புமவைதேர்ந் துறச்சுகிப்பாய், காமமாதி விடற்பாற்றுட் கற்பனையின் மற்றுனியெனே, தீமையனைத்தின் வித்ததனுற் றிருமாலானி யாமென்றான். 29

விடய சிந்தை பெறுநரர்க்கவ் விடயங்களின்மேற் சங்கம்வரு, மடையுஞ் சங்கத்தாற்காம மதனுற் குரோத மதிகரிக்கு, மிடை



யுமதனுன் மிகுமோகமிகுமோகத்தா னினைவயரு, மூடனவ்வயர்வாற் புத்திமகடு மூண்டாநாச மதனுலே. 30

நிருவிகற்ப சமாதியினுண் ணினைவுமாயுமதுதானு, மருவுஞ்சவிகற் பகமதனுன் மற்றதுண்மை தெரிந்துளத்தீங், கருகியேகாந் சத்தமர்ந்தங் களவோங்காரஞ் சொலமாயு, மொருவினதுமு கனபோலு முளமுந் தொழில்விட் டிருந்திடுமே. 31

இந்தப் பதமிக் கிராகவனுக் கிசைத்தான் வசிட்டன் காண்பதிலென், றுந்துமுணர்வா லதுமனத்துக் கொழியினுயரும் பாசுகமாம், பந்தமறுநு லோர்ந்துதமிற் பன்னுட் டெளிந்தேம் வாதனையின், ஞுந்தமகன்ற மௌனமலாற் றுனுநற்கதிவே றிலையன்றே. 32

போகமளிக்குங் கருமத்தாற் புத்தியோர்காற் சலிக்குமெனி, னேகசமாதி மீண்டுடனே யிவையும் பழக்க வலிமையினுற்,

சோக மறுசஞ் சலமிலியைத் தூய்யபிரம வி
த்தென்னல்,மோகமிலிவன் பிரமமே யென்
பர் முனியாய்க் கரைகண்டோர். 33

தேரிவுந் தெரியாமையுந் தீர்ந்து தி
கழ்கே வலமே தானுகிப், பிரிவற் றிருப்
போ னவன்பிரமம் பிரமவித்துத் தானல
னுந், திரிவில் சீவன் முத்தியின்மேற் செரி
யுங் காட்டை யிதுபேறு, மிரியிற் சீவத்
துவிதமிதா லீசத்துவிதம் பகுத்துரைத்
தேம். 34

நான்காவது

துவித விவேக முற்றிற்று.





## ஐந்தாவது

## மகாவாக்கிய விவேகம்.



எதனிற் காண்ப னிதனே விளுவுவன்
வதுவை கொல்வன் வழக்கிடு வான்மிக
மதுர மல்லது மற்றதுந் தேருவ
னதுகொ லாம்பிரஞ் ஞானம தென்பதே.

திசைமு கேந்திர தேவர்கண் மானுட
பசுவங் கோமுத லானவற் றுள்ளுமே
யிசையு ஞானமொன் றேபர மாதலா
னசை பரம்பிரஞ் ஞானமென் பாலுமாம். 2

அறவும் பூரண மாம்பர மாற்றுமா
வுறுமிங் கேயுணர் வுக்குரித் தாமுடற்
செறியும் புத்தியின் சீர்க்கரியாய் மரீஇப்
பிறிவி லாதக மென்று பிறங்குவான். 3

உரிமைப் பூன்றமென் றேது பரம்
பொருள், பிரம மென்பதாம் பின்னுமிங்
காகின, னொருமைத் தாமென் றுணர்த்துவ
தாதலா,லருமைச் சன்மய மாகின னனரோ.

ஏகமேவாத் துவித மெனுஞ் சத்தே
யாகுநாம வுருவ மகன் றது
மாக மாதி வருமுனு மின்றுறும்
பாகு பாடிலப் பண்பது வென்பதாம். 5

வினவு வோனுட லிந்திய மேலதாய்த்
துனுமெய் வத்திங்கு தொம்பத மென்பதா
மனுநல் லொற்றுமை மற்றசி தேற்றிடுந்
தனிமை தொந்தத்தின் றுன்பெறற் பால
தே. 6

சோயம் விளங்கிய சோதிநற் காட்சியே
யயமெனுஞ் சொலி னுலுட் கொளத்தகுந்
துயர கங்கரந் தொக்கிறு வாயின்வே
றியைவ தாற்றுமா வென்றுரை செய்வதாம்.

திரிசி யம்பொய்ச் செகமுழு துக்குமோர்
பிரிவின் மெய்ம்மைப் பிரமம தென்பதா
மரிய வப்பொரு ளான்றதற் சோதியாந்
துரிய வான்ம சொரூபம தாகுமே. 8

**மகாவாக்கிய விவேகம்**
**முற்றிற்று.**



ஆறவது
## சித்திர தீபம்.



சித்திர படத்திற் றவுதங்கட் டிதமுந்
திகழிலாஞ் சிதமிரஞ் சிதமென், றெத்திற
மவத்தை நால்வகை தோற்று மிணையிலாப்
பரம்பொரு ளிடத்து, மத்திரஞ் சித்தோ
டந்தரியாமி யணிதிகழ் சூத்திரான் மாவோ,
டொத்திடு விராட்டிவ் வவத்தைநால் வகை
யுமொளிருமென் றுணர்ந்திடல் வேண்டும்.

இங்குதன் னியல்பின் வெண்மைகாண்
டவுத மிணைதலி னன்னங்கட் டிதமா, மங்
குறு மசிமே னியினிலாஞ் சிதமாம் வன்னங்
க ணிறைந்திரஞ் சிதமா, மங்குநற் பரந்தன்
னியல்பினிற் சித்தா மந்தரியாமிமா யாவி,
தங்குறச் சூக்கஞ் சூத்திரான் மாவாந் தடிப்
புட லான்விராட் டாமே. 2

திரத்தினிற் பிரமன் முதற்றம்ப மீரு
ஞ் சேதனங் களுஞ்செடங் களும்வத், திர

த்திலோ வியம்போ லுத்தம வதமத் திரத்
தினு லுறைவன வாஞ்சித், திரத்தினிற்
கோட்டு மானுடர்க் குறவத் திரத்து
டைப் போலிவே ருச்சித், திரத்தினுக் கிட
வத் திரத்திஞே டுறெழ்வாய்த் திகழ்வ போற்
செயப்பட்ட வன்றே. 3

சித்திலாந் தேகி களுக்குவெவ் வேறு
சீவரொன் றிடுசெதா பாச, ரொத்துவந் தனர்
மிக் கிவர்சமுசார முறுவர்வத் திரத்துடைப்
போலி,தொத்துறு நிறங்க டமையதிட் டா
னத் துகின்மரு வியவெனச் சொலல்போற்,
புத்தியற் றவர்க ளுயிர்ச்சமு சாரம் போத
மே வியதென மதிப்பார். 4

ஓவியத் தமைந்த கிரியெழு வாய்கட்
கொண்டுகிற் போலியில் லதுபோன் மே
விய சிருட்டி மண்ணெழு வாய்க்கு வித்தை
யின் போலியு மிலதா, தாவிறன் வடிவி லிச்
சமு சாரஞ் சத்திய மாய்ப்புணர்ந் ததென,
வாவிய பிரமை யவித்தையா மிதுதான் ம
ன்னிய வித்தையான் மடியும். 5



தன்னுடைப் போலி யாகிய சீவன் ற
னையுறு பவந்தனக் கில்லை, யென்னுமெய்
யறிவே வித்தையா மிதுதா னெழில்விசா
ரத்தின்வந் தெய்தும், மின்னுறு சீவ செக
பரான் மாவை விசாரணை நிதஞ்செயல்
வேண்டு, முன்னுறு சீவ செகச்சுபா வங்க
ளொழிந்திடிற் சொருபமே மிஞ்சும். 6

புலனுரு தொழித லவற்றெழி வன்
ரும் பொய்ம்மையே யென்றிடு துணிவா
மலவெனிற் சுழுத்தி யாதியின் முயல்வற்
றடைந்திடு முயிர்பர கதியை, மலமிலா வா
ன்ம சொருபமிஞ் சுதரூன் மற்றது மெய்
யெனுந் துணிவா, மூலகுதோற் ருமை யல
வலவென்னி லுயர்வுறுமுத்தியின்ருமால்.7

நிரவிசாரத் தாம்வித்தை யேபரோட்
சந் திகழபரோட்சமு மென்ன, விருவகை
யவற்றி னுறினபரோட்ச மியம்பிய விசார
முற் றுறுமாற், பரமமுண் டென்ன வுணர்
வுறி லதுதான் பயன்றரு பரோட்சமா ஞா

னம், பிரமா னென்ன வுணர்வுறி லதுவே பிறங்கப ரோட்சமெய்ஞ் ஞானம். 8

நனியுட னெதனு லிவன்சமுசார மனைத்தையு நண்ணுரு னந்தத், தனிமைவிஞ் ஞானம் பெற்றிட ருணர்வின் றத்துவம் வகுத்துரை செய்கே, னினியகூ டத்தன் பிரமஞ்சீவேச ரெனவுஞ்சித் நீரிரு வகைத்தாம், புனிதவான் கடவம் பரமகா வானம் புனல்வெளி மேகவிண் போலும். 9

கூடத்தவச் சின்ன வானினீ ரகத்துக்க துவிமேகத்தொடு விண்மீ, னடுத்தவா னீர்வா னுமகாவானி னகத்தமர் மேகமண்டலநீ, ரிடத்தனுமேக வான்புயற் றுளியா யிருக்கு நீ ரங்கிச வடிவிற், றடத்தவாற் பிரதி விம்பமா மிதுநீர்த் தன்மையாற் கருதிடப்படுமே.

நிலைமை யாலுட லிரண்டுறை சேதனனிகழ்தரு கூடம்போ, லுலைவிலா மையாற்கூ டத்தனு மிதிலுறு மதிச்சிற் சாயை, யிலகலற்றுயிர் தரித்தலிற் சீவனும் வெம்ப



வ மிவன்சேர்வன் செலவிண்ணுறக்கட விண்ணெனக்கூடத் தன்சீவனுன்மறை வாமால்.

அனைய தேயன்னி யோன்னியாத் தியாசமா மாவியோர் கார்கூடத், தனைமறத்தலே யனுதியா கியவவி வேகமாந் தானீதே, நினைக மூலமா மவித்தை யென்றின் னதுநினைப் பொடுமறைப் பென்றும், வினையிலா னிலைத் தெரிபடா னென்பது விளம்பிய மறைப்பாகும். 12

ஞானகீ னன்மற் றறிஞனுல் வினவமெய் நானறிந் திலன்போத, மானதில் லையிங் கிலகுருதெனு வுணர்ந்தறை குவன்சொயஞ்சோதி, மேனலம் பெறுவவித்தையேதனைவிட மேவுமோ மறைப்பென்னன், மோனே யாம்பல தருக்கந்தன் னனுபவ முழுதையு மறநூறும். 13

தனதுணர்ச்சிநம் பிக்கையின் றேற்றர்க்கந் தான்மனு மையினுலே, பின்னெயங்கே மெய்ம்மை நிச்சயந்தார்க்கிகற் பிறன்

பெறவா னன்றே, மனதுரைத்திடத் தருக்
கம்வேண் டுவதெனின் வாய்த்ததென்னனு
பூதி. யனுசரித்ததாந் தருக்கஞ்செய் குதர்க்
கம்விட் டகலுதிடமாமே. 14

தன்னுணர்ச்சிதா னவித்தையா வரணத்
துந் தகவுறத் தெரிவித்தே, மன்னதானிச
வுணர்வவி ரோதியென் றறிவுறத் தருக்கிப்
பாய், சொன்ன வன்னது விரோதியே வி
யாதினுற் றுகண்மறைப் புணர்வாயோ, தி
ன்னுமா விவேகம் மதன்விரோதியாந் தூய
மேலோர்பாற்காண். 15

சுத்தி வெள்ளிபோ லவித்தையா வர
ணஞ்சேர் சோதியி லிருதேகத், தொத்த
சீவன்விட் சேபவாரோபமா மோதிதுவெனு
ங் கூற்றின், சத்தியத் தன்மை சுத்திமேவு
றும்வெள்ளி தனினிகழ் வுறுமாப்போற்,
சித்தின் மேவுறுஞ் சொயத்தன்மை பொரு
ண்மையுந் திகழும்விட் சேபத்தே. 16

நீணிறப்புறத் தோடுமுக்கோணமு நிக
ழுரு திப்பிக்கண், மானக் கூடத்த னிடத்



தசங் கானந் தமாதியு மறைவாகுந், தானவ்
விப்பியிற் கற்பிதம் வெள்ளியாந் தன்மை
போற் கூடத்த,ஞானம் சத்தி யாசவிட்சேப
முநாமெனனும் பெயர்மேவும். 17

இதுவென் னங்கிசந் தான்றெரிந்திரசத
மெனவறெனுமாப்போலத், திதிபெறுந்தனை
நாமென வெண்ணுவன் றிகழிது வொடு
வெள்ளி, மதிசெயிற்பினந் தானுநாமென்
பது மற்றத னிகர்காண்டி, பொதுமையே
சிறப்பேயென வுபயசதும் பொலிந்திலங்
கிடுமன்றே. 18

தேவதத் தன்றான் செல்பவனவ் வழி
தெரிகு வைநீதான்மற், றுவியில்வி நான்று
னென வோதுசொல் லகிலத்தின் வழக்கா
கு, மேவமற் றிடுவெள்ளி யீதிதுதுகிலென்
பதிலிது போலத், தாவிலின் னவனீயக
மென்பதிற் றுனென்ப துறத் தோன்றும்.

நாமென்கிற் பதுநா னெனற்கியல தாங்
தன்மயத் ததனுலென்,றுனென்கிற் பதே

கூடத் தனுமெனுந் தனிப்பய னெமக்கா
மாற், ருமென்கிற் பதுபுறம்ப கற்றுவ னெ
னிற் சாற்றுத லவ்வாமே, தாமெனன்கிற்
பதேசொருபமென் போர்க்கென்றுஞ் சம்
மதமேயாகும். 20

வேறு.

நாமெனன்ப தமெய்ம்மை யுஞ்சார்ப
சியாயமத்தா, லூனந் தவிரிவ்வுலகின்க
ணுடனிகழ்ச்சி, யீனம்பெறு மற்றவைக்கா
தவினீடி ருனு, மானம்பெறு மெய்ம்மையு
மன்னிய மாற்றமாமால். 21

கடந்தா னறியா தெனத்தன்மை கடா
தியான, செடந்தோன்றுறு மோவெனிற்
ரேன்றுறுஞ் சின்மயான்மா, வடர்ந்தா
தலிற்சிற்சட பேத மான்மாவின் வந்தன்,
றிடந்தோ யுயிராலதுவந்ததென் றெண்ணு
வாயே. 22

எவ்வா றுயிர் தன்னிடை மாயையா லே
யந்த தாமோ, வவ்வாறுக டாதிசடங் களு



மான வாங்கே, தவ்வா வதுவென்ப திதுந்த
மன்மை போல வெங்குஞ், செவ்வா யுறு
மாதவிற் சித்தெனச்செப்பு வாயேல். 23

அதுவோ டிதுமெய்ம்மை யிடத்துறு
மாதலாலே, யதுவோ டிதுமெய்ம்மை யன்
றுநன்மை யாதிபோலு, மதுவோ டிதுதன்
மையு மன்னிய நீயுநானெனன், றதுவாதி
யெதிர்மறை யாகுமிங் கையமின்றே. 24

அனியத்தி னெதிர்மறை தானினக் கன்
ன தோரா, னெனவத்துவிற் கற்பிதமென்
றறி யென்றனன்முன், பினமுற்றுற வெள்
ளியிதென்றிடு பெற்றிபோல, மனிமின் ன
வுமோகரொன் றென்று மதிப்பர்மாதோ.

நாதான்மிய கற்பனை யிங்குமுற் சாற்
றவித்தை, யேதாலுறு மீதிறி லன்னது
மில்லதாகு, மோதாவர ணத்திறனே டொற்
றுமை யோடுஞ் சித்தாற், கோதா மெணம்
பிராரத்த நாசங் குறித்து நிற்கும். 26

முதற்காரணங் கெட்டுங் கணங்கன்ம
மூந்துமென்பர், மதத்தார்க் கிகர் போலெம
க் கேனது வாய்த்திடாதோ, மிதத்தாந் தின
நூற்கவ ரோர்கணம் வேண்டுவாரேற், சதக்
காற்ப மயக்குரித் தாங்கணந் தானுட்கொள்
ளே. 27

பிரமாணமொன் றற்றவர் வீண்மிகப்
பேசுவார்நூ, னுரமூகம தாலுரைப் போர்க்
கரி தென்னையோ சொற், றருத்தார்க்கிக
வாதமிங் கேஙிற்கச் சொல்லு கேஞ்சிற், பரி
ணும சொயத்தகத் தொற்றுமை பற்றன்
மோகம். 28

துக்கோர்க்கயற் பாமரர் தார்க்கிகர் தா
மயக்கான், மிக்காமறை நீத்துத்தி யொன்
றுற்று மெய்ம்மறந்தார், மக்காமுன்பி ஞேர்
வொழிங் தேசிலர் வாக்கின் போலி, யுட்சே
யில ராய்த்தத்தம் பக்கத்தி யோசிப்பாரே.()

வேறு.

சாட்சிமுத லுடலந்தச் சேர்க்கையான்
மாத்தானெனு லகர்யதரு மூடர்தாமுங்,



காட்சியின்போ லியையடைந்தா ரிவர்தம்
பட்சங் காட்டிடுவான் கோ சமன்ன மயமவ்
வாறே, மாட்சிவிரோச னன் கொள்கை மா
னமென்பர் மன்னுயிர் போயிடிற் றேகமரித்
தலாலிங்,காட்சியிலாத் தேகவிலட் சணனே
யான்மா வாகு மென்ப ரவ்வுலகாயதரின்
மேலோா. 30

பிரத்தியக்ஷ மாக்கொளுநா னெனலும்
புத்தி பேசுகின்றே னெனன்முதலாம் பிர
யோகத்தாற், றிரத்துவ மில் லுடற்கய லிங்
கியமான்மாவாத் தெருட்டிடும் வாக் காதி
சண்டை செய்த தாக, வுரத்த சுருதிகள் கே
ட்டே மாதலாலே யுணர்வாகு மவைய தனு
லான் மாவேயாஞ், சிரத்தை யிரணிய கருப்
பருயி ரான் மாவா தியரினணந்தோர்ந்து நித
ஞ் செப்புவாரே. 31

நேத்திர முன் னிந்தியங்க ளகன்று மா
விநிற்கினுய் வாங் துயில் விழித்து நிற்குமா
வி,சாத்திரங்க ளாவியுயர் வென்பதாதி சாற்

றும் வகுத் தாவி மய கோசந்தன்னைத்,தோ
த்திரிப்ப ருபாசகர் நெஞ் சான்மாவென்றே
சொலுமாவிக் கில்லை புசிப் பானுந்தன்மை,
போத்துரு நெஞ் சாகுமெனக்கேட்டே நெ
ஞ்சே புருடருக்குப் பந்தமுத்தி கொடுப்ப
தாமே. 32

மனமயகோ சஞ்சுருதி புகறலாலே
மனமான்மா வெனலாம்விஞ் ஞானமான்மா,
வெனவுரைப்பர் மேற்கணிக வாதி யானோ
ரிம்மனத்தின் காரணம்விஞ் ஞான மத்தாற்,
கனதையகம் விருத்தியிதம் விருத்தி யென்
றுட் காரணமிரு வகையவற்றின் விஞ்ஞான
ந்தான், முனமுரைசெய் யகம்விருத்தி யெ
ன்ன லாகு மொழிந்தவித மெனும்விருத்தி
மனம தாமே. 33

இதம் விருத்திக் ககமெனும் டா வனை
வித்தாந்தன் னியல்புண ரா விடிர்புறம் பெ
வ்வளவுந் தோன்று,வுதய மிறப் படிக் கடியு
மகவிருத்திக் குளவதனுன் விஞ்ஞானங் க



ணிகமாகுந், திதமூறுசொப் பிரகாசந் தன்
னுற்காட்சி சேர்தலின்விஞ் ஞானமய கோச
ஞ்சீவ னதுதனக்குற் பவநாசஞ் சுகதுக் கா
தி யகிலசமு சாரமென்று கமங்களோதும்.

மின்னலொடு மேகநிமைக் கொட்டல்
போலும் விஞ்ஞானங் கணநிலையி தான்மா
வாகா, வன்னியனுக் கறிபடாதாலே பாழே
யான்மாவா மென்பர்மாத் திமிகரானோர்,
முன்னமிது விலதாயே யிருந்ததென்ன
மொழியு மறை யதனாலே ஞான ஞேய,
மென்னுமீர் வடிவுடைய வகில மோகத்திய
ன்றதென வைய மற வெண் ணற்பாற்றே.

நிராதாரப் பிரமை யிலா மையி னுண்
டான்மா நிகழ் தலிற்சூ னிபத்துக்குங் கரி
யாயன்றோ, னிரானுலெற் சொன்னிகழா
விஞ்ஞானத்துள் ளிதர மாயா னந்தமப
னுண் டென்றே,தார தலத்தி லறிதாற்பாற்
றெனன் வைதீக தரிசனமா மனு மகத்தோ
நடுவென்றிங்ஙன், வரா நிற்கு மங்கும் வெகு

வாதஞ் செய்வர் வாதியர்மா மறையுத்தி வழக்கினுலே. 36

நூக்குமநா டியிற் புகலா லந்த ராளர் சொற்பமென்ப ருரோமமா யிரங்கூற்றெப் பிற், போக்குவர வுறுவனணுக் கணுவாமின் ஞேன் புகல் சூக்கத் ததி சூக்க னதனுன்வேத, வாக்கு வெகு தாமணுவாமெனவே சொல்லும் வால நுனி கோடிபங் கிட்டதி லோர் பங்குக்,கேற்கு மிவன் சீவனெனவுணர் தற்பாற்ரு மென விதா மாமறையு மியம்பு மன்றே. 37

திகம்பரர் மத்திமமென்பர் பாதந்தொட்டுச் சிரசீரூயறிவு நிறைந்திலகலானு, நகம் பரியந் தமெனுமறை யானுஞ்சூக்க நாடிபுகலாற் சூக்கவுறுப்பாலாங்கஞ்,சுகம்புகல் போற் காங்களினுற் றூலதேகஞ் சுருங்கல்விரிவுறு முடலிற் புகு தரூனு, மகம்பயிலான் மாவுறுப்பின் வளர்வுதேய் வா லா மதனுன் மத்தி ௳மென் றறியல் வேண்டும். 38



உறுப்புடையோன் கடம் போல மாய்வன் மாய்ந்தா லுஞற்றிய தனெழிவு ஞற்ரு ததன்வாத்து, மறுப்பதெவ னதனுலே மகத்தா மான்மா மத்திமமு மணுவுமலவான மென்னக், குறிப்பறவெங் கணுநிறைந்தோனுறுப்பொன்றில் லோன் குணவேத சம்மதனு மென்று கூறிச், சிறப்பிடையும் வெகு கலகஞ் செய்வர் சித்தோ செடந்தானோ சிற் செடமோ வென்னு கின்றே. 39

பிரபாக ரருந்தார்க்கி கருமற் ருன்மாப் பேசிலசித் தாமென்ப ரம் பரம்போற், பொருளான்மா வொலி போற்றற் குணஞ் சித்தாமிப் புந்தி யெனவிருப்பு வெறுப்புடன் முயற்சி, தருமா தன்மமு மின்பதுன்பத் தோடு தற்சமுக்கா ரமுங் குணமா மன தோடான்மா,மருவாகின் றிடிற் றனதிட் டத்தா லெல்லாம் வருமதிட்ட மிற்றுயிலின் மடியுமன்றே. 40

அறிவுடைமை யாலிவன்சே தனனு மிச்சை யகிச்சை முயற்சியு முளனுந் துன்ப

